ஆ.—தாலே புருஷகாரபூர்வக ப்ரபத்யுபாயத்தின் அதியதிசயதாதிகாரி ஸ்வபாவங்களையும், மூன்ரும் ப்ரகரணத்தாலே ப்ரபத்யங்க த்யாக விஷயோபாயாந்தர தோஷங்களையும், நாலாம்ப்ரகரணத்தாலே உபாயாந்தர ஸம்ஸர்க்காஸஹஸித்த்தோபாய ததபேக்ஷிதவைபவ விரோதிகுண்வ்ருத்திவிசேஷதத்காரணகார்ய க்ரௌர்யதத்ப்ரயுக்த ததீயவைபவ விசேஷங்களையும் அஞ்சாம்ப்ரகரணத்தாலே ப்ரபந்நதிநசர்யாஸூஸந்த்தாநாநுஷ்ட்டாந சோதநதச்சரமாநுஷ்ட்டாநபூர்வதசாகுணசதுஷ்டய சோதநத்சரமகுணவிஷய நிஷ்த்தப்ரகாரவிவரணங்களையும், ஆரும்ப்ரகரணத்தாலே உக்தகுணவர்த்தக ஸதாசார்யஸ்வரூபலக்ஷணங்களையும், ஏழாம்ப்ரகரணத்தாலே ஸச்சிஷ்யஸ்வரூப ஸ்வபாவவ்ருத்தி லக்ஷணங்களையும், எட்டாம் ப்ரகரணத்தாலே தத்குணஸம்பத்திஹேதுவான ஸர்வரக்ஷக நிர்ஹேதுக கடாக்ஷ நிரூபணத்தையும், சரமப்ரகரணத்தாலே தத்கடாக்ஷாநுகுண ஸ்வரூபாநுரூப சரமோபாயோபேய நிர்ணயவிசேஷங்களையு மருளிச்செய்தார். ஆகபுருஷகாரம், தத்பூர்வோபாயம், ததங்கவிஷயோபாயாந்தர தோஷம், தத்ஸங்காஸஹஸித்த்தோபாயநிஷ்ட்டாவைபவம், தத்திநசர்யாக்ரமம், தத்வர்த்தகஸதாசார்யலக்ஷணம், ததநுரூபசிஷ்யலக்ஷணம், தத்குணஸம்பத்யஹேதுகத்வநிரூபணமும், தத்ஸ்வரூபாநுகுண

ஜீ.—வர்த்த நிர்ணயகப்ரமாண மின்னதென்னுமதும், இவ்வர்த்த ஸ்த்தாபநத்துக்கீடான வுபபத்தியும், ஐதிஹ்யமும், இவ்வர்த்தோபபாதநார்த்தமாக ப்ராப்யநிர்ணயமும், இப்படி ப்ராப்யநிர்ணயம் பண்ணினவிதுக்கு ஸத்ருசமாகவே கொள்ளவேணும் ப்ராபகமென்னுமதும் அல்லாதபோது வருதூஷணமும், ஈச்வரவிஷயத்தி லிவனுக்குள்ள சரணவத்பாரதந்த்ர்யாநந்யத்வங்களை ஸூசிப்பித்துக்கொண்டு ஈச்வரனைப்பற்றுமதில் இவனைப்பற்றுமதுக்குள்ள விசேஷமும், ஈச்வரசேதநர்க ளிருவர்க்கு மிவனுபகாரகனென்றும், ஈச்வரனுமாசைப்படும் பதத்தையுடையவனென்றும், இவன் பண்ணுமுபகாரத்துக்கு ஸத்ருசப்ரத்யுபகார மில்லையென்றும், இவனோட்டைஸம்பந்த்தம் மோக்ஷத்துக்கேஹேதுவா யிருக்குமென்றும், ஈச்வரனையுபகரித்தவிவனிலும் இவனையுபகரித்த வீச்வரனே மஹோபகாரகனென்றும், இவ்வாசார்யவைபவமும், ஆத்மகுணமுண்டானாலு மாசார்யஸம்பந்த்தத்தைநெகிழில் அந்தப்ரயோஜநமு மவத்யகரமும், மீச்வரநிக்ரஹஹேதுவுமாம்படியும், ஆசார்யஸம்பந்த்தவிச்சேதத்தில் பகவத்ஸம்பந்த்த தௌர்லப்யமும், ஆசார்யாந்வயத்துக்கும் பாகவதஸம்பந்த மபேக்ஷிதமென்னுமதும், ஆசார்யாபிமாநமொழிய வுஜ்ஜீவநோபாயமில்லையென்னுமிடத்தில் ஆப்தோபதேசமும், இவ்வர்த்தத்தினுடைய ஸ்த்திரீகரணமும், இவ்வாசார்யாபிமாநநிஷ்ட்டனானவன் சுலபமானவிவ்விஷயத்தைவிட்டு துர்லபமான பகவத்விஷயத்தை ரக்ஷகமாக விச்சிக்கக்கடவனல்லனென்றும், பரத்வாதிப்ராப்யஸ்தலங்களெல்லா மிவ்விஷயமே யென்றிருக்கக்கடவனென்றும், இவனுக்கு ப்ரதிகூலாநுகூலாநுபயரின்னாரென்றும், இவனுடைய ஜ்ஞாநாநுஷ்ட்டாநங்களுக்கு விநியோகமும், இவனுக்கு நிஷித்தாநுஷ்ட்டாநமும் விஹிதபோகாதிகளும் த்யாஜ்யமென்னுமிடமும், ஸ்வரூபப்ரச்யுதிவாராமைக்கு வேண்டுமவஸ்த்தையும், ப்ராப்யபூமிப்ராவண்யாதித்ரயமு மிவனுக்கவச்யாபேக்ஷிதமென்னுமதுவும், ஆசார்யவிஷயத்தில் ஸ்வகதபரகதஸ்வீகாரோபாயத்வய ப்ரமாணங்களும், ஆசார்யாபிமாநத்தின் ஸ்வதந்த்ரோபாயத்வமும், தததிகாரி நிர்ணயமும்,

ஆ.—ப்ராப்யப்ராபக நிர்ணயமென்கிறவசநார்த்த ரத்நகசிதமாய் ஸாரஜ்ஞ ச்ரவணஹ்ருதயரஸ ஜ்ஞபூஷணமாம் வசநபூஷணத்தை, பிள்ளை லோகாசார்யர், அநந்யகதிகளுக்கு உஜ்ஜீவிக்கும்படி வெளியிட்டருளினர்.

సారజ్ఞశ్రుతిహృత్తాలుధార్యంవచనభూషణమ్ ।
యదీయరసనాకార్యం లోకాచార్యంతమాశ్రయే ॥

ஸாரஜ்ஞச்ருதிஹ்ருத்தாலுதார்யம்வசநபூஷணம்।
யதீயரஸநாகார்யம் லோகாசார்யம்தமாச்ரயே ॥

ஜநந்யாசார்யர் திருவடிகளேசரணம்.

முற்றிற்று.

---

ஜீ.—இவ்வாசார்யாபிமாந மிச்சேதநனுக்குண்டாக்கும் பலபரம்பரையும் சொல்லுகையாலே, ஸதாசார்யாபிமாநமே ஸர்வர்க்கு முத்தாரகமென்னுமிடம்சொல்லப்பட்டது.

ஆகவித்தால் வாக்யத்வயோக்தோபாயோபேயசரமாவதியை
யருளிச்செய்தாராயிற்று.

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

முற்றிற்று.